# நூல் அறிமுகம்

| | |
|---|---|
| **புத்தகத்தின் பெயர்** | :மூதுரை(இரு மொழிகளில்) |
| **ஆசிரியர்** | : **விசு அய்யர்** |
| **புள்ளி** | : 11 **புள்ளி** (arial) |
| **முதல் பதிப்பு** | : 2025 |
| **கருத்து உரிமை** | : **ஆசிரியருக்கு** |
| **ஒளி அச்சு** | : **மணி பதிப்பகம்** |
| **பக்கம்** | : 36 |
| **விலை** | : INR. 51 ($3) |

# மதிப்புரை

மூதுரை நூலின் தொடர்ச்சியாக நல்வழி என்ற நூலினை மதிப்பிற்குரிய நூலாசரியர் படைத்து இருக்கிறார். இந்த நூலுக்கு மதிப்புரை எனது கைவண்ணத்தில் இருக்க வேண்டும் என்று சொல்லி இருக்கிறார். நான் மதிப்புரை வழங்க வேண்டும் என்றால், நான், இன்னமும் தமிழ் படிக்க வேண்டும் என்றே சொல்ல வேண்டும். எனக்கு தமிழ் தாய் மொழி தான் என்றாலும் நான் பள்ளிகளில் தமிழ் மொழி படித்தது இல்லை.



பள்ளி கல்லூரி நாட்களில் ஹிந்தி மற்றும் மராத்தியே எனக்கு பாட மொழி என்றாலும், தமிழ் மீதுள்ள அன்பின் மிகுதியால், இணைய வழியாகவும், வீட்டில் பாடம் படித்தும் என தமிழ் மொழியை எழுதவும் படிக்கவும் கற்றுக் கொண்டேன். எனினும் உரைநடை தமிழாக இருந்தால் படித்து புரிந்து கொள்ள முடியும். ஆனால் செய்யுள் ஆக இருந்தால், படிக்கிற வேகத்தில் புரியாது.

இது எனக்கு மட்டும் அல்ல; இன்றைய தலைமுறையினர் gen-zக்கு உள்ள சிக்கலும் இதுவாகவே இருக்கும். அவர்களுக்கே ஆர்வம் வந்து அதை படித்து

புரிந்து கொண்டு தமிழுக்கு பெருமை சேர்ப்பவர்கள் உண்டா? என்றால் பதில் கேள்வியாக தான் இருக்கும்.

அது போன்ற சமயத்தில், இளைய தலைமுறையினரை தொடர்ந்து இந்த வாய்ப்பினை எனக்கு தந்த கொண்டு இருக்கும் இந் நூலாசிரியருக்கு வணக்கத்தை யும் நன்றியையும் பதிவு செய்கிறேன்.

ஔவையார் அருளிய நல்வழி மூதுரை என்ற முத்துக்களின் தொடர்ச்சியாக பார்க்கிறேன். தமிழ் படிக்க தெரியாத தமிழர்கள் மட்டும் அல்ல தமிழே தாய் மொழியாக இல்லாத மற்றவர்களுக்கும் பயன் படும் படி இந்த நூலினை transliteration செய்து அதற்கான பொருளை எளிய நடையில் ஆங்கிலத்தில் தந்து இருப்பது பாராட்டுக்குரியது.

இத்துடன் இல்லாமல், ஒவ்வொரூ பாடல் பகுதியையும் digital செப்பேடுகளாகவும் ஆடியோ வடிவிலும், எளிதாக அணுக, தனியாக இதற்கு என websiteல் பதிவேற்றி இருப்பதும் வரவேற்க தக்கது. ஆசிரியரின் இந்த பெரு முயற்சிக்கு ஒரு “சபாஷ்” கொடுக்கலாம்.

ஆசிரியரின் உழைப்புமக்களிடம் நல்ல கருத்துக்கள் சென்று சேர வேண்டும் என்ற உயரிய நோக்கத்தையும் எடுத்துக் காட்டுக்கிறது.

ஒரு சிந்தனையை எப்படி கவனமாக கையாள்வது, அதை படைப்பாக எப்படி தருவது என எடுத்துச் சொல்வது இந்த சாதூரியம். அந்த முயற்சியில் வந்த இன்னொரு படைப்பு இது என்பதில் எள்ளளவும் ஐயமில்லை நூலாசிரியர் .

இந்த புத்தகத்தை அமேசான், விக்கிமீடியா, மற்றும் மின் நூலகத்தில் கிடைக்கும் படி செய்து இருப்பதால் , அன்பர்கள் அவசியம் வாங்கி படித்து பயன் பெற வேண்டும். அதுவே இந்நூல் ஆசிரியருக்கு செய்யும் கைமாறு ஆகும்.

மின் நூலாக வெளி வரும் இந்த புத்தகத்தை அமேசான், விக்கிமீடியா, மற்றும் மின் நூலகத்தில் கிடைக்கும் படி செய்து இருப்பது பாராட்டுக்குரியது. இந்நூல் ஆசிரியரின் **podcast** சானலில் ஆடியோ புத்தகமாகவும் ஒளிபரப்புவது பாராட்டுக் குரியது. அன்பர்கள் இந்த புத்தகத்தை வாங்கி படித்து பயன் அடைந்து நூல் ஆசிரியரை ஊக்கப்படுத்த வேண்டும் என அன்புடன் விரும்புகிறேன்.

உங்கள்

மணிகண்டன்

# என்னுரை

காலம் மாறுகிறது. காட்சிகள் மாறுகிறது. ஆனால் கடமை உணர்வு மாறுகிறதா என்றால் இல்லை என்பதே பதிலாக இருக்கும். இருந்தோம். வாழ்ந்தோம் இறந்தோம் என்று இல்லாமல், அடுத்த தலைமுறையினருக்கு நல்ல சிந்தனைகளை விட்டு செல்வது என்பது எல்லோருக்கும் இருக்கும். எதை செய்வது என்பதில் எப்படி செய்வது என்பதில், பலருக்கு தயக்கமும் சுனக்கமும் இருக்கலாம்.

அந்த சிந்தனையில் தான், ஔவையாரின் மூதுரை, நல்வழி, இவைகளை தமிழ், மற்றும் ஆங்கிலம் என இரு மொழிகளிலும், ஆத்திச் சூடி, கொன்றை வேந்தன் இவைகளை தமிழ், ஆங்கிலம், ஹிந்தி, என மும் மொழியிலும் அனைவரும் பயன் படுத்திக் கொள்ளும் விதமாக, ஆடியோ, வீடியோவாகவும், உலகம் முழுவதும் கேட்கும் படியாக podcastலும், websiteலும் கிடைக்கும்படி அமைத்து தந்து இருக்கிறோம்.

பாரத பிரதமர் மாண்புமிகு நரேந்திர மோதி ஜி அவர்களின் கனவு திட்டமான “ஆத்ம நிர்பார் பாரத் திட்டத்தில்” ஈர்க்கப்பட்டு உருவான படைப்பு இது என்பதில் பெரு மகிழ்ச்சி அடைகிறேன்.

தமிழ் மற்றும் ஆங்கிலத்தில் இணைத்து செய்த “**நல்வழி**” என்ற இந்த நூலினை வழக்கம் போல கணினி

அச்சு செய்து புத்தகமாக உருவாக்கி கொடுத்த **மணிபதிப்பகத்தாரு**க்கு நன்றியை பதிவு செய்கிறேன்.

எனது வேண்டுகோளை ஏற்று நூலிற்கு வாழ்த்துரை தந்த அருளாலயம் அமைப்பின் பொருளாளர் **திரு.மணிகண்டன் அய்யர் அவர்களுக்கு** மனம் நெகிழ்ந்த நன்றியையும் பாராட்டுதல்களையும் பதிவு செய்கிறேன்.

நமது நூல் படைப்பின் வரிசையில் இன்னொரு, மைல் கல் என்ற ஆவலில் இந்த புத்தகத்தினை வழக்கம் போல வாங்கி படித்து பயன் அடைந்து நூல் ஆசிரியரை ஊக்கப்படுத்த வேண்டும். இந்த நூல் அமேசான், விக்கி மீடியா மற்றும் archieve மின் நூலகம் போன்ற தளங்களில் கிடைக்கும்.

வாங்கி படித்து பயன்பெறவும் மற்றவர்களுடன் பரிசாக பகிர்ந்து கொள்ளவவும் வேண்டுகிறேன்.

பேரன்புடன்

# ஔவையார் அருளிய நல்வழி

பாலும் தெளிதேனும் பாகும் பருப்புமிவை
நாலும் கலந்துனக்கு நான் தருவேன்-கோலம்செய்
துங்கக் கரிமுகத்துத் தூமணியே நீ எனக்குச்
சங்கத் தமிழ் மூன்றும் தா.

பால் தேன் வெல்லம் , பருப்பு இவை நான்கும்
கலந்தால் அது பாயாசம் எனும் இனிப்பு அதை
படைத்து விநாயகப் பெருமானிடம் வேண்டுடல்
வைக்கப்படுகிறது

**Transliteration:**

**Pālum theḷi-thēnum pāgum paruppum ivai**
**Nālum kalandhu unakku nān tharuvēn – kōlam seyy**
**Thunga karimugaththu thūmaṇiyē, nī enakku**
**Sangath thamizh mūnrum thā.**

**Meaning:**

"I will blend milk, clear honey, jaggery syrup, and lentils—
a sweet offering prepared with devotion—
and present it to You, O Pure Gem, with the majestic elephant face,
Ganesha! In return, bless me with the mastery of all three branches of classical Tamil wisdom."

**புண்ணியம்ஆம் பாவம்போல் போனநாள் செய்தஅவை**
**மண்ணில் பிறந்தார்க்கு வைத்தபொருள் -எண்ணுங்கால்**
**ஈதொழிய வேறில்லை; எச்சமயத்தோர் சொல்லும்**
**தீதொழிய நன்மை செயல்.**

இருவினை இயற்றுவது தான் உயிரின் இயல்பு,
பிறப்பிறப்பின் போது உடன் வருவது புண்ணியம்
எனும் நல்வினை, பாவம் எனும் தீவினை. அதனால்
நன்மைகளையே செய்வோம்.

**Transliteration:**

**Puṇṇiyam-ām pāvampōl pōna nāḷ seytha avai**
**Maṇṇil piṟanthārkku vaiththa poruḷ – eṇṇungāl**
**Īthozhiya vērillai; ecchamayaththōr sollum**
**Thēthozhiya nanmai seyal**

**Meaning:**

"The good and bad deeds we've done in past days—
they are the true wealth we carry in this life.
When we reflect deeply, there's no greater path than giving.
All faiths proclaim the same truth:
Doing good, avoiding harm—that is virtue."

**சாதி இரண்டொழிய வேறில்லை சாற்றுங்கால்**
**நீதி வழுவா நெறிமுறையின் – மேதினியில்**
**இட்டார் பெரியார் இடாதார் இழிகுலத்தார்**
**பட்டாங்கில் உள்ள படி**

மற்றவர்களுக்கு கொடுத்து உதவுபவர்கள், உதவாதவர்கள் என இரு பிரிவினரே இவ்வுலகில் உள்ளனர். பிறருக்கு உதவியாக வாழ்வதே வாழ்க்கை

**Transliteration:**

**Sādhi iraṇḍozhiya vērillai sāṟṟungāl**

**Nīthi vaḻuvā neṟimuṟaiyin – mēthiniyil**

**Iṭṭār periyār iṭāthār iḻikulaththār**

**Paṭṭāṅgil uḷḷa paṭi**

**Meaning:**

"There are only two true castes in this world:
those who give with justice and grace,
and those who do not.
Forget lineage—
the generous are noble,
the selfish are base,
no matter their birth."

**இடும்பைக்(கு) இடும்பை இயலுடம்(பு) இதன்றே**
**இடும்பொய்யை மெய்யென்(று) இராதே – இடுங்கடுக**
**உண்டாயின் உண்டாகும் ஊழில் பெருவலிநோய்**
**விண்டாரைக் கொண்டாடும் வீடு**

வறியவர்களுக்கு உதவ வேண்டும். அதுவே வாண் உலகில் வாயிலை திறந்து வைத்திருக்கும்

**Transliteration:**

**Iṭumpaikku iṭumpai iyaluṭampu ithanrē**
**Iṭum-poyyai meyyendru irādhē – iṭuṅkaṭuga**
**Uṇḍāyin uṇḍāgum ūḻil peruvali nōy**
**Viṇḍāraik koṇḍāḍum vīdu**

**Meaning:**

"The body is by nature bound to suffering;
don’t mistake this fleeting pain as ultimate truth.
Even great afflictions arise from karma.
Endure patiently—
for the divine world celebrates those
who help the suffering."

**எண்ணி ஒருகருமம் யார்க்கும்செய் ஒண்ணாது**
**புண்ணியம் வந்தெய்து போதல்லால் – கண்ணில்லான்**
**மாங்காய் விழவெறிந்த மாத்திரைக்கோல் ஒக்குமே**
**ஆங்காலம் ஆகும் அவர்க்கு**

தக்க காலம் அறிந்து செய்தால் பயன் உண்டு. பங்கு சந்தை முதலீடாக இருந்தாலும் பயனுள்ள வாழ்க்கை யாக இருந்தாலும் சரி. இல்லையெனில் கையில் உள்ளது கூட போய்விடும்.

**Transliteration:**

**Eṇṇi oru karumam yārkkum seyy oṇṇāthu**

**Puṇṇiyam vandhu eydhu pōdallāl – kaṇṇillān**

**Māngāy viḻa veṟindha māthiraikkōl okkumē**

**Āṅkālam āgum avarkku**

**Meaning:**

"Whatever you do, do it with thoughtful timing.
If merit doesn't align, it won't succeed.
Even a blind man can hit a mango
if it falls right into his hand during a storm—
Success comes only at the right time."

**வருந்தி அழைத்தாலும் வாராத வாரா**
**பொருந்துவன போமி(ன்) என்றால் போகா – இருந்தேங்கி**
**நெஞ்சம் புண்ணாக நெடுந்தூரம் தாம்நினைந்து**
**துஞ்சுவதே மாந்தர் தொழில்**

எதிர்பார்த்து காத்திருந்து கிடைக்கவில்லையே என வருந்தி அழுவதால் பயனில்லை. வருவது தானே வரும். வருத்தமில்லாமல் கடமையை செய்.

**Transliteration:**

**Varundhi aḻaiththālūm vārātha vārā**

**Porundhuvana pōmin enṟāl pōkā – irundhēṅgi**

**Neñjam puṇṇāga neḍundhūram thām ninaindhu**

**Tuñchuvadhē māndhar thoḻil**

**Meaning:**

"Even if you cry out in sorrow,
what is not meant to come will never come.
And even if you say 'let it go,'
some things won't leave you.
Humans live brooding in pain,
wounded by longing—until they fall asleep."

**உள்ளது ஒழிய ஒருவர்க்(கு) ஒருவர்சுகம்**
**கொள்ளக் கிடையா குவலயத்தில் -வெள்ளக்**
**கடலோடி மீண்டும் கரையேறினால் என்**
**உடலோடு வாழும் உயிர்க்கு**

அடுத்தவரைப் போல வாழ வேண்டும் என துடிப்பதல்ல வாழ்க்கை. நமக்கென உள்ளது நமக்கு கிடைக்கும். அதனால் கிடத்ததில் மகிழ்ச்சி கொள்ள வேண்டும்.

**Transliteration:**

**Uḷḷadhu ozhiyā oruvarkku oruvar sukam**
**Koḷḷak kiḍaiyā kuvalayaththil – veḷḷak**
**Kadaḷōdi mīṇḍum karai ēṟināl en**
**Uḍalōdu vāzhum uyirkku**

**Meaning:**

"In this vast world, no one can take another's joy.
What's destined is meant only for you.
Even if waves toss it far into the sea,
what's yours will come back to shore—
just as your soul lives on in your body."

எல்லாப்படியாலும் எண்ணினால் இவ்வுடம்பு
பொல்லாப் புழுமலிநோய் புன்குரம்பை -நல்லார்
அறிந்திருப்பார் ஆதலினால் ஆம்கமல நீர்போல்
பிறிந்திருப்பார் பேசார் பிறர்க்கு

வாழ்க்கை நிலையில்லாதது. நிலையில்லாத உலகில் நிலைத்து வாழ வேண்டும் எனில், பற்றில்லாமல் மற்றவர்களுக்கு பயனுள்ள வாழ்க்கை வாழ வேண்டும்.

**Transliteration:**

**Ellāp paḍiyālum eṇṇināl ivvuḍampu**
**Pollāp pu̱lu malinōy pu̱n kurampai – nallār**
**A̱rindiruppār āthalināl ām kamala nīr pōl**
**Pi̱rindiruppār pēsār pi̱rarkku**

**Meaning:**

"Think in any way, this body is a filthy sack,
riddled with worms, disease, and decay.
The wise know this truth.
Like the lotus untouched by the water,
they live detached and don't indulge in idle talk."

ஈட்டும் பொருள்முயற்சி எண்ணிறந்த ஆயினும்ஊழ்
கூட்டும் படியன்றிக் கூடாவாம் – தேட்டம்
மரியாதை காணும் மகிதலத்தீர் கேண்மின்
தரியாது காணும் தனம்

.

ஓடி.. ஓடி.. உழைத்தாலும், நமக்கு ஒட்டுவது தான் ஒட்டும். பொருள் சேர்க்கும் ஆசையை இரண்டாம் நிலையில் வைத்து அடுத்தவருக்கு உதவுவதை முதல் நிலையில் வைத்து வாழ பழகுங்கள்

**Transliteration:**

**Īṭṭum poruḷ muyarchi eṇṇiṟantha āyinum ūzh**

**Kūṭṭum paḍiyandri kūḍāvām – thēṭṭam**

**Mariyādai kāṇum makithalaththīr kēṇmiṉ**

**Thariyāthu kāṇum thanam**

**Meaning:**

"Even if efforts to earn are countless,
wealth will come only as destined by fate.
Listen, people who seek respect—
chasing wealth blindly
only brings restless sorrow."

**ஆற்றுப் பெருக்கற் றடிசுடுமந் நாளுமவ்வா**

**ஊற்றுப் பெருக்கால் உலகூட்டும் – ஏற்றவர்க்கு**

**நல்ல குடிபிறந்தார் நல்கூர்ந்தார் ஆனாலும்**

**இல்லை என மாட்டார் இசைந்து**

நற் குடியில் பிறந்தவர்கள் வறியவர்கள் கேட்கும் போது உள்ள பொருளை கொடுத்து மகிழ்வார்கள். நீர் வற்றிய ஆற்றில் ஊற்று நீர் உதவுவது போல

**Transliteration:**

**Āṟṟup perukkath thaḍi suḍuman nāḷum avvā**

**Ūṟṟup perukkāl ulakūṭṭum – ēṟṟavarkku**

**Nalla kuḍi piṟanthār nalkūrnthār ānālūm**

**Illai ena māṭṭār isaindhu**

**Meaning:**

"A riverbed may run dry in summer,
but the spring beneath still nourishes it.
Likewise, those born into noble families,
even if they are poor,
will never say ‘I have nothing’
when asked—they always share."

**ஆண்டாண்டு தோறும் அழுது புரண்டாலும்**
**மாண்டார் வருவரோ மாநிலத்தீர் – வேண்டா!**
**நமக்கும் அதுவழியே! நாம்போம் அளவும்**
**எமக்கென்? என்(று) இட்டு, உண்டு, இரும்**

பிறப்பு ஒன்று வந்து விட்டால் இறப்பு உறுதி. அதுவரை வாழும் நாம் நமக்கென வாழாமல் பிறர்க்கு என வாழ பழக வேண்டும்.

**Transliteration:**

**Āṇḍāṇḍu tōṟum aḻudhu puraṇḍālum**

**Māṇḍār varuvarō mānilaththīr – vēṇḍā!**

**Namakkkum adhu vaḻiyē! nām pōm aḷavum**

**Emakken? eṉṟu iṭṭu, uṇḍu, irum**

**Meaning:**

"You may weep and roll in sorrow year after year,
but the dead will not return, O people of the earth.
We too must take that same path one day.
Until then, live simply,
eat what you have, and serve others without attachment."

**ஒருநாள் உணவை ஒழியென்றால் ஒழியாய்**
**இருநாளுக்கு ஏலென்றால் ஏலாய் – ஒருநாளும்**
**என்நோ(வு) அறியாய் இடும்பைகூர் என்வயிறே**
**உன்னோடு வாழ்தல் அரிது**

செய்ய வேண்டிய வேலைகளை சரியாக செய்ய வேண்டும். பல வேலைகளை சேர்த்து ஒரே நாளிலோ, ஒரு வேலையும் செய்யாமல் ஒரு நாளிலோ கழிப்பது முடியாது. todo list போல போட்டு அன்றைய வேலையை அன்றே செய்ய வேண்டும்.

**Transliteration:**

**Orunāl uṇavai ozhiyenrāl ozhiyāy**
**Irunāḷukku ēlenrāl ēlāy – orunāḷum**
**En nōvu aṟiyāy iṭumpaikūr en vayirē**
**Unnōdu vāzhthal aridhu**

**Meaning:**

"If you say skip one day's work, I will;
if you say work for two days straight, I will.
But not even one day do you feel my pain,
O stomach that constantly aches—
living with you is truly hard."

**ஆற்றங் கரையின் மரமும் அரசறிய**
**வீற்றிருந்த வாழ்வும் விழும் அன்றே – ஏற்றம்**
**உழுதுண்டு வாழ்வதற்கு ஒப்பில்லை கண்டீர்**
**பழுதுண்டு வேறோர் பணிக்கு**

உழைத்து சம்பாதிப்பதே உறுதியான நல் வாழ்வை தரும். மற்றவை நிலை இல்லாதவை.

**Transliteration:**

**Āṟṟang karaiyin maramum arasar aṟiyā**
**Vīṟṟirundha vāzhvum viḻum anṟē – ēṟṟam**
**Uḻudhuṇḍu vāzhvadhaṟku oppillai kaṇḍīr**
**Paḻudhuṇḍu vērōr paṇikku**

**Meaning:**

"Even a tree by the riverbank
can be swept away without warning—
so too can a life of luxury fall.
There's nothing like earning through honest labor;
all else is uncertain and unreliable."

**ஆவாரை யாரே அழிப்பர் அதுவன்றிச்**
**சாவாரை யாரே தவிர்ப்பவர்- ஓவாமல்**
**ஐயம் புகுவாரை யாரே விலக்குவார்**
**மெய்அம் புவியதன் மேல்**

எத்தனை முயற்சி எடுத்தாலும் ஒருவரை அழிக்க முடியாது. அவரவர் வினைக்கு ஏற்ப அவரவர் வாழ்க்கை அமையும் என்பதால் அடுத்தவருக்கு

கெடுதல் செய்யாமல் பயனுள்ள வாழ்க்கையை வாழ வேண்டும்.

**Transliteration:**

**Āvārē yārē aḻippar adhu anṟich**
**Cāvārē yārē thavirppavar – ōvāmāl**
**Aiyyam puguvārē yārē vilakkuvār**
**Meyam puviyadhan mēl**

**Meaning:**

"Who can destroy those meant to live?
And who can save those destined to die?
On this very earth,
who can stop someone from entering doubt?
No matter how hard you try—
destiny shapes each life."

**பிச்சைக்கு மூத்த குடிவாழ்க்கை பேசுங்கால்**
**இச்சைபல சொல்லி இடித்துண்கை – சிச்சீ**
**வயிறு வளர்க்கைக்கு மானம் அழியாது**
**உயிர்விடுகை சால உறும்**

மானம் இழந்து அடுத்தவரை அண்டி நல்ல குடியில் வாழ்பவர்கள் வாழ மாட்டார்கள். அப்படி தான் வாழ வேண்டும் என்றால் இறப்பதை தான் விரும்புவார்.

**Transliteration:**

**Pitchaikku mūtha kuḍi vāzhkkai pēsuṅgāl**

**Ichchai pala solli iḍitthu uṇkai – sichchī**

**Vayiṟu vaḷarkkaikku māṇam aḻiyāthu**

**Uyir viḍukai sāla uṟum**

**Meaning:**

"A dignified life is far better than begging.
To beg and eat by breaking one's pride is shameful.
Rather than lose self-respect to feed the stomach,
one would rather die with honor."

**சிவாய நம என்று சிந்தித் திருப்போர்க்கு**
**அபாயம் ஒருநாளும் இல்லை – உபாயம்**
**இதுவே மதியாகும் அல்லாத எல்லாம்**
**விதியே மதியாய் விடும்**

ஐந்தெழுத்து ஒன்றே வாழ்வை வாழ்விக்கும். மற்றது எல்லாம் விதிப்படியே நடக்கும்.

**Transliteration:**

**Sivāya nama enru sinthiththu iruppōrkku**

**Apāyam oru nāḷum illai – upāyam**

**Idhuvē mathiyāgum allādha ellām**

**Vidhiyē mathiyāy viḍum**

**Meaning:**

"To those who constantly chant 'Sivāya Nama',
no danger will ever approach.
This alone is the true wisdom—
everything else is left to fate."

**தண்ணீர் நிலநலத்தால் தக்கோர் குணம்கொடையால்**
**கண்ணீர்மை மாறாக் கருணையால் – பெண்ணீர்மை**
**கற்பழியா ஆற்றல் கடல்சூழ்ந்த வையகத்துள்**
**அற்புதமாம் என்றே அறி**

நல்ல மனிதர்களின் குணம் அவர் தம் நற்காரியங்கள் மூலம் அறியலாம். தண்ணீரின் குணம், பெண்ணின் பெருமை இவை எல்லாம் இது போலத் தான்

**Transliteration:**

**Thaṇṇīr nila nalaththāl thakkōr guṇam kodaiyāl**
**Kaṇṇīrmai māṟāga karuṇaiyāl – peṇṇīrmai**
**Kaṟpaḻiyā āṟṟal kaḍal sūzhntha vaiyagaththuḷ**
**Aṟputhamām enṟē aṟi**

**Meaning:**

"Water is known by the richness of the land it nurtures.
Good people are known by their acts of generosity.
A woman's dignity by her modesty,
and true compassion by unchanging kindness.
In this vast world surrounded by oceans—
these are the real wonders to know."

**செய்தீ வினையிருக்கத் தெய்வத்தை நொந்தக்கால்**
**எய்த வருமோ இருநிதியம்?- வையத்து**
**“அறும்-பாவம்!” என்ன அறிந்து அன்றிடார்க்கு இன்று**
**வெறும்பானை பொங்குமோ மேல்?**

முற்பகல் செய்வதே பிற்பகல் விளையும். நாம் யாருக்கு உதவி செய்தவமோ அவை தான் நம் தேவைக்கு வந்து நிற்கும். மற்றவர்களுக்கு உதவாமல் நமக்கே அனைவரும் உதவ வேண்டும் என நினைப்பது வருத்தத்துக்கு உரியது.

**Transliteration:**

**Seythī vinai irukkath theyvaththai nonthakkāl**
**Eydha varumō irunithiyam? – vaiyaththu**
**"Aṟum pāvam!" eṉṉa aṟindhu anṟiṭārkku iṉṟu**
**Veṟumpānai poṅgumō mēl?**

**Meaning:**

"If one holds onto evil deeds
but prays to God in anger—
will divine grace flow like twin treasures?
No! If you didn’t pour anything yesterday,
how will an empty pot overflow today?"

**பெற்றார் பிறந்தார் பெருநாட்டார் பேருலகில்**
**உற்றார் உகந்தார் எனவேண்டார் – மற்றோர்**
**இரணம் கொடுத்தால் இடுவர்; இடாரே**
**சரணம் கொடுத்தாலும் தாம்**

அடுத்தவர்களுக்கு கொடுக்காமல் சேர்த்து வைக்கும் செல்வம், வறுமையில் தள்ளி விடும் என்பதை விட, தேவைக்கு உதவ எதுவும் இருக்காது.

**Transliteration:**

**Peṟṟār piṟanthār perunāṭṭār pēruḷagil**

**Uṟṟār ugandhār eṉavēṇḍār – maṟṟōr**

**Iraṇam koduththāl iṭuvar; iṭārē**

**Saraṇam koduththālum thām**

**Meaning:**

"Don't rely on who gave birth to you,
or where you were born,
or even those who once loved you.
If someone gives you food, they'll stand by you—
otherwise, even if they offer shelter,
they won't truly help you."

**சேவித்தும் சென்றிரந்தும் தெண்ணீர்க் கடல்கடந்தும்
பாவித்தும் பாராண்டும் பாட்டிசைத்தும் – போவிப்பம்
பாழின் உடம்பை வயிற்றின் கொடுமையால
நாழி அரிசிக்கே நாம்**

ஒரு சில பயனை அடைய வலிமை இல்லாதவரை வல்லவர் என்றும், கருமியை வள்ளல் என்றும் போற்றுவது சிலருக்கு வாழ்க்கையாகி விட்டது. உண்மையில் இதுவல்ல வாழக்கை.

**Transliteration:**

**Sēviththum se<u>nr</u>irandhum theṇṇīr kaḍalkaḍandhum**

**Pāviththum pāraṇḍum pāṭṭisaitthum – pōvippam**

**Pā<u>l</u>in uḍampai vayi<u>rr</u>in koṭumaiyāl**

**Nā<u>l</u>i arisikē nām**

**Meaning:**

"We worship, we beg, we cross oceans,
chant and sing sacred verses for years—
yet, we do all this
only to fill our stomach,
for a mere handful of rice,
bearing the burden of this empty body."

**அம்மி துணையாக ஆறிழிந்த வாறொக்கும்**
**கொம்மை முலைபகர்வார் கொண்டாட்டம் -இம்மை**
**மறுமைக்கும் நன்றன்று மாநிதியம் போக்கி**
**வெறுமைக்கு வித்தாய் விடும்**

கல்லை காட்டிக் கொண்டு யாராவது கடலில் குதிப்பது; வரைவின் மகளிரை நம்பி வாழ்க்கையை இழப்பது போன்றது

**Transliteration:**

**Ammi thuṇaiyāga ā<u>r</u> i<u>l</u>indha vā<u>r</u> okkum**

**Kommai mulaipagarvār koṇṭāṭṭam – imma**

**Ma<u>r</u>umaikkum na<u>nr</u>an<u>r</u>u mānithiyam pōkki**

**Ve<u>r</u>umaikkuk viththāy viḍum**

**Meaning:**

"Relying on a seductress for joy
is like falling into a river with a grinding stone for support.
Even if you spend your wealth on such pleasures,
it brings no good for this life—
and plants the seed of ruin for the next."

**நீரும் நிழலும் நிலம்பொதியும் நெற்கட்டும்**
**பேரும் புகழும் பெருவாழ்வும் – ஊரும்**
**வருந்திருவும் வாழ்நாளும் வஞ்சமில்லார்க் கென்றும்**
**தரும்சிவந்த தாமரையாள் தான்**

பிறருக்கு துன்பம் செய்யாதவருக்கு மட்டும் அல்ல, அடுத்தவர் அழிய வேண்டும்என நினைக்காதவர்களுக்கு எல்லா நன்மையும் உண்டாகும்.

**Transliteration:**

**Nīrum nil̲alum nilam pothiyum ner̲kaṭṭum**
**Pērum pugazhūm peruvāzhvum – ūrum**
**Varundhiruvum vāl̲nāḷum vañchamillārkku en̲r̲um**
**Tharum sivandha thāmaraiyāḷ thān**

**Meaning:**

"Water, shade, land to sow, grain to store,
fame, fortune, a thriving life,
a peaceful home and long years—
the goddess Lakshmi offers these generously
to those who live without deceit."

**பாடுபட்டுத் தேடிப் பணத்தைப் புதைத்துவைத்துக்
கேடுகெட்ட மானிடரே கேளுங்கள் – கூடுவிட்டுங்(கு)
ஆவிதான் போயினபின் யாரே அனுபவிப்பார்
பாவிகாள் அந்தப் பணம்**

தேடி வைத்த செல்வம் உயிர் பிரியும் போது உடன் வருவதில்லை. அதனால் இருக்கும் போதே பிறருக்கு உதவி செய்து வாழ வேண்டும்.

**Transliteration:**

**Pāḍupaṭṭuth thēṭip paṇaththaip puthaiththu vaiththu
Kēṭu getṭa māṇiḍarē kēḷuṅgaḷ – kūḍu viṭṭuṅgu
Āvi thān pōyina pin yārē anubavippār
Pāvigāḷ andhap paṇam**

**Meaning:**

"You toil, gather, and bury wealth with care—
O foolish ones, listen!
When your soul departs this body,
who will enjoy all that money?
That hoarded gold will not follow you."

**வேதாளம் சேருமே வெள்ளெருக்குப் பூக்குமே
பாதாள மூலி படருமே – மூதேவி
சென்றிருந்து வாழ்வளே சேடன் குடிபுகுமே
மன்றோரம் சொன்னார் மனை**

பொய் சாட்சி சொல்வதால் குற்றவாளி நிரபராதி ஆகிவிடலாம். அதனால் ஏதோ சில பயங்களுக்கு அப்படி சொல்லாமல் வாழ்வதே சிறந்த வாழ்க்கை ஆகும்.

**Transliteration:**

**Vēthāḷam sērumē veḷḷeruḳkup pūkkumē**
**Pāthāḷa mūli paṭarumē – mūthēvi**
**Se<u>nr</u>irundhu vā<u>l</u>vaḷē sēṭan kuḍipugumē**
**Ma<u>nr</u>ōram so<u>nn</u>ār ma<u>n</u>ai**

**Meaning:**

"The ghost may join her,
the poisonous arali flower may adorn her,
creepers may rise from the underworld—
if a home welcomes false testimony,
that house will fall;
even the lowest will enter it,
and live there proudly."

**நீறில்லா நெற்றிபாழ் நெய்யில்லா உண்டிபாழ்**
**ஆறில்லா ஊருக் (கு) அழகுபாழ் – மாறில்**
**உடன்பிறப் பில்லா உடம்புபாழ் பாழே**
**மடக்கொடி இல்லா மனை.**

நல்ல குணம் இல்லாத இல்லாள் இருப்பதால் எல்லாம் பாழ். அமைதி செல்வம் நிம்மதி என எதுவும் இல்லாமல் வீணாக போகும்.

**Transliteration:**

**Nīṛillā neṟṟipāḻ, neyyillā uṇḍipāḻ**
**Āṟillā ūrukku aḻagupāḻ – māṟil**
**Uṭanpiṟappillā uḍampupāḻ; pāḻē**
**Maṭakkodi illā maṉai**

**Meaning:**

"A forehead without sacred ash is empty.
A meal without ghee is tasteless.
A village without a river lacks beauty.
A life without close ties is hollow—
and a home without a virtuous woman
is utterly barren."

**ஆன முதலில் அதிகம் செலவானால்**
**மானம் அழிந்து மதிகெட்டுப் – போனதிசை**
**எல்லார்க்கும் கள்ளனாய் ஏழ்பிறப்பும் தீயனாய்**
**நல்லார்க்கும் பொல்லனாம் நாடு.**

வருவாய்க்கு அதிகமாக செலவு செய்ய கூடாது. கடன் கிடைக்கிறதே என வருவாய்க்கு அதிகமாக வீட்டுக்கடன் கார் கடன் என வாங்கி செலவு செய்து வாழ்வதால் சேமிப்பு இழந்து வருந்தும் போது ஒருவரும் மதிக்க மாட்டார்கள்.

**Transliteration:**

**Āṉa mudhalil adhikam selvānāl**
**Māṇam aḻindhu mathi geṭṭup – pōnadhisai**
**Ellārkkum kaḷḷanāy ēḻ piṟappum thīyanāy**
**Nallārkkum pollanām nāḍu**

**Meaning:**

"If you spend more than you earn at the start,
you’ll lose respect and be seen as foolish.
Soon, society will brand you a thief—
in this birth and seven more.
Even the noble will see you as a disgrace."

**மானம் குலம் கல்வி வண்மை அறிவுடைமை**
**தானம் தவர்உயர்ச்சி தாளாண்மை – தேனின்**
**கசிவந்த சொல்லியர்மேல் காமுறுதல் பத்தும்**
**பசிவந்திடப் பறந்து போம்**

மானம், குலப்பெருமை, கல்வி, வலிமை, அறிவு, பிறருக்கு கொடுக்கும் குணம், தவம், பெருந்தன்மை, தளராத முயற்சி, போன்ற பத்தும் பசி வந்தால் பறந்து போகும் . (வயிற்று பசி மட்டும் அல்ல). அதனால் நிதானமாக வாழ வேண்டும்.

**Transliteration:**

**Māṇam kulam kalvi vaṇmai aṟivuṭaimai**

**Thānam thavam uyarcci thāḷāṇmai – thēṉin**

**Kasivantha solliyar mēl kāmuṟudhal paththum**

**Pasivanthidap paṟandhu pōm**

**Meaning:**

"Honor, heritage, knowledge, strength, wisdom,
generosity, penance, ambition, leadership—
and even love toward sweet-spoken ones—
all these ten virtues
fly away when hunger takes hold."

**ஒன்றை நினைக்கின் அதுஒழிந்திட் டொன்றாகும்**
**அன்றி அதுவரினும் வந்தெய்தும் – ஒன்றை**
**நினையாத முன்வந்து நிற்பினும் நிற்கும்**
**எனையாளும் ஈசன் செயல்**

மனிதன் நினைப்பதெல்லாம் நடப்பதில்லை. இறைவன் விதிப்பதே நடக்கும்.

**Transliteration:**

**Oṉṟai ninaikkīn adhu ozhindhiddu oṉṟāgum**

**Aṉṟi adhu varinum vandheydhum – oṉṟai**

**Ninaiyādha mun vandhu niṟpinum niṟkum**

**Eṉaiyālum Īsan seyal**

**Meaning:**

"What you think might never happen,
and what you never thought of
might arrive anyway.
Even if you forget it,
if it is willed by God, it will stand firm—
for it is the work of the Supreme."

**உண்பது நாழி உடுப்பது நான்குமுழம்**
**எண்பது கோடி நினைந்து எண்ணுவன – கண்புதைந்த**
**மாந்தர் குடிவாழ்க்கை மண்ணின் கலம்போலச்**
**சாந்துணையும் சஞ்சலமே தான்**

இருப்பதை வைத்து மகிழ்ச்சியுடன்-நன்றியுடன் வாழ வேண்டும். இல்லாததை நினைத்து வாழ்வதால் துன்பமே நிலைக்கும்.

**Transliteration:**

**Uṇpadu nāḻi uḍuppadu nāṉgu muḻam**
**Eṇpadu kōḍi ninaindhu eṇṇuvana – kaṇ pudaintha**
**Mānthar kuḍi vāzhkai maṇṇin kalambōlach**
**Sānthu uṇaiyum sañchalamē thān**

**Meaning:**

"A handful of food,
four arms of cloth—
that's all we truly need.
But blinded by desire,
people dream of crores.

Yet life, like footprints on sand,
is always shifting—unstable."

**மரம்பழுத்தால் வெளவாலை வாவென்று கூவி**
**இரந்தழைப்பார் யாவருமங் கில்லை – சுரந்தமுதம்**
**கற்றா தரல்போல் கரவாது அளிப்பரேல்**
**உற்றார் உலகத் தவர்**

கொடுக்கும் வரை தான் உறவுகள். மரத்தில் பழங்கள் இருக்கும் போது தான் பறவைகள் வந்து மரத்தில் அமர்ந்து பழம் தின்னும்.

**Transliteration:**

**Maram pazhuththāl veuvvālai vāvenṟu kūvi**
**Irandhaḻaippār yāvarum aṅgillai – surandhamudham**
**Kaṟṟā tharaḷ pōl karavādhu aḷipparēl**
**Uṟṟār ulagaththavar**

**Meaning:**

"When a tree bears fruit,
birds come flocking with calls of joy—
but when the tree goes barren, none remain.
So are people in the world—
as long as you give without holding back,
you'll have company."

**தாம்தாம்முன் செய்தவினை தாமே அனுபவிப்பார்**
**பூந்தா மரை யோன் பொறிவழியே – வேந்தே**
**ஒறுத்தாரை என்செயலாம் ஊரெல்லாம் ஒன்றா**
**வெறுத்தாலும் போமோ விதி**

நமக்கு துன்பம் செய்தவருக்கு நாம் துன்பம் செய்ய வேண்டியது இல்லை. அது நாம் வினையின் பயன் என நொந்து கொள்ள வேண்டுமே தவிர, அவரை நோக செய்வதால் பயன் இல்லை.

**Transliteration:**

**Thām thām mun seytha vinai thāmē anubavippār**
**Pūnthāmarai yōn pori vazhiyē – vēndhē**
**Oruththārai en seyalām ūr ellām onrā**
**Veruththālum pōmō vidhi**

**Meaning:**

"Each must face the result
of their own past deeds—
this is the law, declared by the lotus-born Brahma.
Even if all the world stands against it,
fate will not change.
If someone wronged you,
don't retaliate—fate will take its course."

**இழுக்குடைய பாட்டிற்(கு) இசைநன்று சாலும்**
**ஒழுக்கம் உயர்குலத்தின் நன்று – வழுக்குடைய**
**வீரத்தின் நன்று விடாநோய்பழிக்கஞ்சாத்**
**தாரத்தின் நன்று தனி**

மற்றவர்களுக்காக வாழ்வது தீங்கை தரும். அதை தவிர்த்து நாம் நிலையில் நாம் வாழ்வதே சிறந்தது.

**Transliteration:**

**Iḻukku uḍaiya pāṭṭirkku isai naṉṟu; sālum**

**Oḻukkam uyar kulaththin naṉṟu – vaḻukku uḍaiya**

**Vīraththin naṉṟu viḍā nōy; paḻikkañchādhu**

**Thāraththin naṉṟu thaṉi**

**Meaning:**

"Even a flawed song may sound sweet.
But conduct is the true grace of noble birth.
The worth of valor lies in persistence—
and the beauty of a woman
in a garland unafraid of slander."

**ஆறிடும் மேடும் மடுவும்போ லாம்செல்வம்**
**மாறிடும் ஏறிடும் மாநிலத்தீர் – சோறிடும்**
**தண்ணீரும் வாரும் தருமமே சார்பாக**
**உண்ணீர்மை வீறும் உயர்ந்து**

செல்வம் வரும் போகும். அதனால் செல்வம் வரும் போது, பிறருக்கு உதவி செய்து வாழுங்கள். அதுவே உயிர் நிலையை உயர்த்தும்.

**Transliteration:**

**Āṛiḍum mēṭum maṭuvum pōl ām selvam**

**Māṛiḍum ēṛiḍum mānilaththīr – sōṛiḍum**

**Thaṇṇīrum vārum dharumamē sārbāga**

**Uṇṇīrmai vīṟum uyarndhu**

**Meaning:**

"Wealth is like rivers, hills, and pits—
it rises and falls.
So, people of the earth,
share your rice and water while it flows.
Let dharma be your anchor—
generosity lifts the soul higher."

**வெட்டெனவை மெத்தனவை வெல்லாவாம்(;) வேழத்தில்**
**பட்டுருவும் கோல்பஞ்சில் பாயாது – நெட்டிருப்புப்**
**பாரைக்கு நெக்குவிடாப் பாறை பசுமரத்தின்**
**வேருக்கு நெக்கு விடும்**

மென்மையாக இன்சொல் பேசி பழகினால் யாரும் நம்மை அழிக்க முடியாது. கடுமையான விஷயங்களை எளிமையாக சாதிக்கலாம்.

**Transliteration:**

**Veṭṭeṉavai meththana vai vellāvām; vēḻaththil**
**Paṭṭu uruvum kōl pañjil pāyādhu – neṭṭiruppu**
**Pāraikku nekkuvitāp pāṟai, pasu maraththin**
**Vēṟukku nekku viṭum**

**Meaning:**

"Soft things can overcome hard ones.
Even silk, shaped with care,
won’t drape over an elephant unless handled gently.
Rock will not yield to force,
but gentle water can loosen even a tree's root
deep in the mountain."

**கல்லானே ஆனாலும் கைப்பொருள்ஒன் றுண்டாயின்**
**எல்லாரும் சென்றங் கெதிர்கொள்வர் – இல்லானை**
**இல்லாளும் வேண்டாள் மற் றீன்றெடுத்த தாய்வேண்டாள்**
**செல்லா(து) அவன்வாயிற் சொல்**

பணம் இருந்தால் தான் மதிப்பு. அதனால் பிறர் வருந்தி அல்லது பிறர் பொருளை வஞ்சித்து சம்பாதிக்க கூடாது.

**Transliteration:**

**Kallāṉē āṉālūm kaipporuḷ oṉṟu uṇḍāyin**
**Ellārum seṉṟaṅg edhirkolvār – illāṉai**
**Illāḷum vēṇḍāl, maṟṟ īṉṟeḍuththa tāyum vēṇḍāl**
**Sellādhu avan vāyiṟ chol**

**Meaning:**

"Even a brute with money
will be welcomed and honored.
But the one with nothing—
neither his wife, nor even his own mother—
will care for his words."

**பூவாதே காய்க்கும் மரமுள மக்களுளும்**
**ஏவாதே நின்றுணர்வார் தாமுளரே – தூவா**
**விரைத்தாலும் நன்றாகா வித்தெனவே பேதைக்கு**
**உரைத்தாலும் தோன்றா(து) உணர்வு**

மூடர்களுக்கு எத்தனை சொன்னாலும் அவர்கள் மாற மாட்டார்கள். இது எல்லா துறையிலும் உண்டு.

**Transliteration:**

**Pūvādhē kāykkum maramuḷa makkaḷuḷum**
**Ēvādhē ni̱nru uṇarvār thāmuḷarē – thūvā**
**Viraiththālum na̱nrāgā viththu e̱navē pēthaikku**
**Uraiththālum thō̱nrādhu uṇarvu**

**Meaning:**

"There are trees that bear fruit without flowers—
and people who learn without being taught.
But for a fool,
even if you sow the best seeds or speak the finest truths,
no understanding will sprout."

**நண்டுசிப்பி வேய்கதலி நாசமுறுங் காலத்தில்**
**கொண்ட கருவளிக்குங் கொள்கைபோல்-ஒண்டொடீ**
**போதந் தனங்கல்வி பொன்றவருங் காலம்அயல்**
**மாதர்மேல் வைப்பார் மனம்**

பிறன் மனை நோக்கா பேராண்மை வேண்டும். அப்படி தவறு செய்பவர் கல்வி, பண்பு பதவி, பெயர், புகழ் செல்வம் என அனைத்தும் அழிந்து விடும்.

**Transliteration:**

**Naṇḍu sippi vēy kathali nācamu̱rum kālaththil**
**Koṇḍa karuvaḷikkum koḷgaipōl – oṇṭoṭī**
**Pōdham thanam kalvi po̱nruvarum kālam ayal**
**Mādharmēl vaippār ma̱nam**

**Meaning:**

"When a crab, shell, or plantain decays,
the rot spreads from the inside.
Just the same, when a man
sets his heart on another's wife,
his dignity, wealth, wisdom, and status—
all begin to decay from within."

**வினைப்பயனை வெல்வதற்கு வேதம் முதலாம்**
**அனைத்தாய நூலகத்தும் இல்லை-நினைப்பதெனக்**
**கண்ணுறுவது அல்லால் கவலைப்படேல் நெஞ்சேமெய்**
**விண்ணுறுவார்க் கில்லை விதி.**

நன்மையை கொண்டு தீமையை ஒழிக்க முடியாது. நெருப்பை நெருப்பால் அணைக்க முடியாது. தீமையை நன்மையால் வெல்ல வேண்டும்.

**Transliteration:**

**Vinaippayanai velvadarkku vēdham mudhalām**
**Aṉaitthāya nūlagaththum illai – ninaippadheṉak**
**Kaṇṇuṟuvathu allāl kavalai paḍēl neñjē mey**
**Viṇṇuṟuvārkku illai vidhi**

**Meaning:**

"The path to overcoming karma begins with the Vedas.
Not all books show the way.
O heart, don't worry about what the eye cannot see—
for those bound for the heavens,
there is no fate that can stop them."

**நன்றென்றும் தீதென்றும் நானென்றும் தானென்றும்**
**அன்றென்றும் ஆமென்றும் ஆகாதே – நின்றநிலை**
**தானதாம் தத்துவமாம் சம்பறுத்தார் யாக்கைக்குப்**
**போனவா தேடும் பொருள்**

செயல்களில் பற்று இல்லாமல் செயல்களை செய்ய வேண்டும். தேவையில்லாமல், ஆய்வு செய்து இருப்பதை இழக்க கூடாது.

**Transliteration:**

**Nan̲r̲en̲r̲um thīdhen̲r̲um nān̲en̲r̲um thān̲en̲r̲um**
**An̲r̲en̲r̲um āmen̲r̲um āgādhē – nin̲r̲a nilai**
**Thānadhām thaththuvamām sambaruṭṭhār yākkaiykkup**
**Pōn̲avā thēḍum poruḷ**

**Meaning:**

"Don’t cling to 'this is good', 'that is bad',
'this is me', or 'that is mine'.
All such ideas come and go.
Truth stands still.
The one who has conquered desire
seeks only what the soul truly needs."

**முப்பதாம் ஆண்டளவில் மூன்றற்று ஒருபொருளைத்**
**தப்பாமல் தன்னுள் பெறானாயின்-செப்புங்**
**கலையளவே ஆகுமாம் காரிகையார் தங்கள்**
**முலையளவே ஆகுமாம் மூப்பு.**

இள வயதினிலேயே மும் மலம் கடந்து அன்பு நிலை கடந்து அருள் நிலைக்கு தன்னை தயார் செய்து கொள்ள வேண்டும். அதுவே வாழ்வின் பயனாகும்.

**Transliteration:**

**Muppadhām āṇṭaḷavil mūṉṟaṟṟu oruporuḷaith**
**Thappāmāl thaṉṉuḷ peṟānāyin – seppum**
**Kalaiyaḷavē āgumām kārigaiyār thaṅgaḷ**
**Mulaiyaḷavē āgumām mūppu**

**Meaning:**

"If by the age of thirty,
you haven’t shed the three impurities and
realized the One Truth,
your growth will remain stunted—
like a woman whose maturity ends
at the fullness of her breast."

**தேவர் குறளும் திருநான் மறைமுடிவும்**
**மூவர் தமிழும் முனிமொழியும் – கோவை**
**திருவா சகமும் திருமூலர் சொல்லும்**
**ஒருவா சகமென் றுணர்.**

திருக்குறள், நான்மறை, மூவர் தமிழ், திருவாசகம், திருக்கோவையார் திருமூலர் அருளிய திருமந்திரம் என அனைத்தும் வாழ்வை வளப்படுத்தி உயிரின் நிலையை உயர்த்த சொல்வன என்பதை அறிந்து கொள்வது நல்லது.

**Transliteration:**

**Thēvar kuṟaḷum thirunān maṟai muḍivum**
**Mūvar thamizhum muṉi moḻiyum – kōvai**
**Thiruvāsagamum Thirumūlar sollum**
**Oruvāsagam eṉṟu uṇar**

**Meaning:**

"Thirukkural, the Upanishads,
the poems of the three Tamil luminaries,
the words of sages,
Thiruvāsagam, and Thirumandiram—
know them all as one single voice of truth."

# ஆசிரியர் குறிப்பு

விசு அய்யர், தமிழ்நாட்டில் உள்ள வீரம் செறிந்த பசும்பொன் முத்துராமலிங்க தேவர் மாவட்டத்தில், சிவகெங்கை சீமையில் இந்துக்களால் சிறப்பாக கொண்டாடப்படும் ஸ்ரீ கிருஷ்ண ஜெயந்தி நன்னாளில், தோன்றியவர்.



வரி சட்டத்தில் முதுகலை பட்டம் பெற்றவர். பள்ளி நாள் முதல் தொடர்ந்து சிறந்த மாணவனாக தேர்ந்து எடுக்கப்பட்ட இவர் இந்திய அளவிலான நினைவு திறன் போட்டியில் பரிசு பெற்றவர். தேசிய அளவிலான அதிவேக தட்டச்சு போட்டியில் வெற்றி பெற்றவர். “சித்தாந்த ரத்னா”, “திருவருட் செல்வர்”, “கைரேகை கலைஞன்” போன்ற இவர் பெற்ற பாராட்டுக்களும் நன்மதிப்பும் பெருமைக்கு உரியன.

இன்று வரை உண்மையான பிரம்மச்சரிய வாழ்க்கையில், உணவிலும், உணர்விலும் இயற்கையோடு இனைந்து வாழும் சீரிய ஒழுக்கத்தை கொண்டவர். பெரியபுராணம், திருக்குறள், மற்றும் சைவ திருமுறைகளில் ஆழ்ந்த ஈடுபாடு கொண்ட இவர் சமய இலக்கியங்களில் பல ஆய்வு கட்டுரைகளை பதிப்பித்து உள்ளார். பன்முக திறமை கொண்ட இவர் எழுதிய சோதிட புத்தகங்களும் வார இதழில் எழுதும் தொடர் கட்டுரைகளும் வாசகர்கள் நெஞ்சத்தை கிள்ளி செல்லும். இவருக்கு என்றே ஒரு வாசகர் கூட்டம் இவரை சுற்றி தொடரும்.

சென்னை அரிமா சங்கம், சென்னைசுழற் சங்கம், அறிதுயில் சங்கம் மற்றும் குடும்ப நற்பணி மன்றம் போன்ற பல இடங்களில் பல்வேறு தலைப்புகளில் உரை நிகழ்த்தி உள்ளார்.

உடலாலும் உள்ளத்தாலும் சீரிய ஒழுக்கத்தினாலே இன்றும் சொல்லிலும் செயலிலும் இளைஞனாகவே இருக்கின்றார். சொந்த வாழ்க்கையில் மட்டுமின்றி, நடைமுறை வாழ்க்கையிலும் ஒரு ஒழுக்க முறையினை செயல்படுத்தும் இவர் கையில் திருக்குறளும், பையில் திருநீறும், மெய்யில் உருத்திராக்கமும் இருக்கும் என்பதே இவரின் எளிய அடையாளம்.

